உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# பட்டினத்தடிகள் அருணகிரியார்க்குத் தந்தை யாவரா?

மேனாட்டு நாகரீகத்தைப் பின்பற்றிய நமது தமிழ் நாட்டினர், தற்காலம் வாசகசாலை, சைவசித்தாந்தசபை பொதுஜெனசபை, ஆசார சீர்திருத்தசபை, மஹாஜனசபையாதிய பலபெயர் கொண்ட சபைகளை யாங்காங்கு நிலைநிறுத்தி, ஆங்குத் தமிழ், ஆங்கிலம் முதலிய பலபத் திரிகைகளை வரவழைத்தும், புத்தகநிலயம் ஏற்படுத்தியும், வாரத்திற் கொருமுறை பிரசங்கம் புரிந்தும் வருவதானது; நமது முன்னேற்றத்திற்கோர் கல்லடையாளமென்றே கூறலாம். இங்ஙன மேற்பட்டுவரும் பொதுக்கூட்டங்களில் சில தமிழ் வித்வான்கள் தோன்றித் தாய் நாட்டின் தனித்தமிழ்ப் பாஷையின் மீது நிரம்பக்காதல் பாராட்டி, அதனபிவிருத்தியில் கண்ணுக்கருத்துமாயிருந்து, அப்பாஷையில் அதிக பாண்டித்தியம்பெற்றுப் புலவர் திலகர்களாய் விளங்கிய அப்பெரியாளின் அருமை பெருமைகளையும், சிறந்தபாடல் நலங்களையும், புகழாதி சம்பிரமங்களையும் எடுத்துவிளக்கிக் கேட்போர்க்கு மெய்யன்பும் அரு தாபமும் உதிக்கச்செய்கின்றனர். சிலபண்டிதர்கள் நமது பழம்புல வர்களின் வாழ்நாளாதிய அருங்குணச் செயல்களின் வரன்முறைத் திறந்தெளியுந் திறனற்றுக்கற்பனைக்கட்டுரை, அபூதவர்ணனை, அலங்காரரூபகம், இயற்பகைவிரோதம் முதலிய அசம்பாவிதங்களில் பூரணி நம்பிக்கை கொண்டு மர்க்கிடப்பிடியாய் ஆராய்ச்சியாதிய கவனமின்றி மனங்கொண்டதே தீர்மானமெனச் சிந்தித்துத்தம்மட்டோடு நில்லாது பிறர்க்கெடுத்துரைத்து மயங்கவும், இடருறவுஞ்செய்து வருகின்றனர். நாகர்கவிருத்தி தீவிரமாய்ப்பரவிச், செப்பேடு, சிலாசாஸனம், மேனாட்டுச்சரிதமுறை முதலிய சாதனங்கள் மலிந்துவரும் இக்காலத்திலுங் கூட நமது வித்வான்கள் சிலர் திருந்தாது, அன்று கண்டமேனியழியாதவாறு கண்டுவருவது விசனிக்கக்கூடியதே. இதற்க நுகுணமாகச் சிலர், பட்டினத்தடிகள் அருணகிரியார்க்குத் தந்தையாவரெனச் சில முரணானமேற்கோள்களுடன் ஆன்றோர் சபையில் பிரசங்சித்தும் வருகின்றனர். இவ்விடயம் எம்மட்டும் உண்மை யென்பதைத் தக்கக்காரணங் காட்டிவிளக்குவாம்.

பாரதம் பாடிய வில்லிபுத்தூரர், ஆசுகவிகாளமேகம் அருட்கவி பிரட்டையர், சாத்தேயசம்பந்தாண்டான் முதலிய அரும்பெரும் புலவர்கள் வாழ்ந்த காலமாகிய கி. பி. 15 - ம் நூற்றாண்டிலிருந்த அருண கிரியாரை 10 - வது நூற்றாண்டிலிருந்த பட்டினத்தடிகள் காலத்தவராகச் சிலர் மதிக்கின்றனர். அன்னார்க்குத் 'தோடவிழும் பூங்கோதைத் தோகையுனைத் தேடினவர்" என்னுந் தொடக்கத்துப்பாடலொன்றே காரணமாகத் தோன்றியிருக்கலாம், இஃதொன் றனையே காரணமாகக்கொண்டு ஒருவர் சரிதத்தை விவரித்தற்குக்காலம், களம் காரணம் என்ற இம்மூன்றும் அவசியம். இவற்றுள் ஒன்றனையுங் காரணங்கொண்டு காட்டாது, பொதுவாக அருணகிரியார் பட்டினத்தாரின் திருக்குமாரரென்று கழப்புவது

கொள்ளற்பாலதாமோ? சரிதவிடயங்கட்கெல்லாம் தக்கமேற்கோளிராவிடின், நாகரீக முடைய இக்காலமனோதரும மிக்கவர் ஒப்புவரோ? 'பழையனகழிதலும் புதியன புகுதலும், வழுவலவகைபினானே,' என்பதையிக்காலத்தார் கவனித்தும் கையாடியும் வருவதால் கதைபோன்றுள்ள சம்பவங்களை நம்புவது கஷ்டமாய் முடிகின்றது. அன்றி நம் பழம்புலவர் தம் சரிதங்கள் முன்னையவிட இப்போது எத்தனையோ மேலாய் மேனாட்டு நாகரீக முறையைப் பின்பற்றி ஆராய்ச்சி மிக்க அறிஞர் பலரும் அங்கீகரிக் கத்தக்க விதமாய் வெளிவரத் தொடங்கிவிட்டன. ஆகவே பழங்கால சாரமற்றகர்ணபரம் பரைச்செய்திகள் கொண்ட விஷயம் விரும்பத் தக்கனவல்ல.

இனி, பட்டினத்தடிகள் 10 - வது நூற்றாண்டினர் என்பதைக் கவனிப்போம்: - சைவநெறித்திருத் தொண்டருள் சமயாசாரியர் கட்கடுத்தஸ்தான மேற்பவரும், உண்மைத்துறவால் உயர்வடைந்து தலை சிறத்தாரும் பட்டினத்தடிகளே யென்பது, தமிழ்ப்பயிற்சி மிக்க அறிஞர் பலர் மனமறிந்த உண்மையாம். அன்றியும் தாம்பாடிய திரு விடை மருதூர் மும்மணிக் கோவையுள்,

"வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்,"

என இவரே சமயகுரவர் நால்வரையும் குறித்துள்ளாராகலின் அப்பெரியார் நால்வரும், இப்பேருலகினின்று மறைந்தருளிய பின்னரே நமது அடிகள் இருந்தனரென்பது வெளிப்படை. நம்பியாண்டார் நம்பிகள் தொகுத்த பதினொன்றாந் திருமுறைப் பிரபந்தங்களுள், பட்டினத்தடிகள் அருளிய பிரபந்தங்கள் ஐந்து அடங்கியிருத்தலால், பதினொன்றாம் நூற்றாண்டில் இருந்தவராக வைத்தெண் ணப்படும் நம்பிகள் காலத்துக்கு அடிகள் முந்தியவரென்பது, உறுதியேயாம். முன்பு குறித்த மும்மணிக் கோவையுள் பட்டினத்தார்,

"விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய அன்பின் வாகுண தேவரும்"

என வரகுணபாண்டியனைப் பலவாறாகப் புகழ்ந்துள்ளாராகலின். அவன் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டுக்குப்பின் இருந்தவராவர். ஆகவே நமதடிகள் காலம் பத்தாம் நூற்றாண்டென்ப தொருதலை.

நமது அடிகள் உண்மைத்துறவுடையாரென்பதை,

"பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர்,"

எனக்கண்ணுடைய வள்ளலாரும்,

"ஒட்டுடன் பற்றின்றி யுலகைத்துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ?",
"பாரனைத்தும் போய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆருந்துறக்கை யரிதரிது"

எனத்தாயுமானப் பெருந்தகையும் விதந்து புகழ்ந்து கூறுமாற்றால் நன்கு தெளியலாம்.

நம்பியாண்டார் நம்பிகள் தொகுத்த பதினொன்றாந் திருமுறையுள் சேர்த்தனபோக எஞ்சிய நமது அடிகள் திருவாய் மலர்ந்த திருப் பாடற்றிரட்டு முதலிய பிரபந்தங்கள் அப்பதினொன்றாந் திருமுறையுள் விடப்பட்டமையால், அவற்றைச் செய்தவர் பிற்காலத்துப் பெரியாரொருவராயிருக்கலாமென வாதிப்பாருமுண்டு. நூல் கடை முதலியன தமது கருத்தைப் பின்பற்றுவன வென்றுக் கூறவர், ஆயினும் அவ்வாறு உரம்பெறக் கூறுவதற்கேற்ற ஆதாரமாதிய சாதனங்களெவையும் இருப்பதாகத் தெரிவதற்கில்லை,

இனி, அருணகிரியார் நமது பட்டினத்தார்க்கு மகவாய்த் தோன்றினவகை எம்மட்டும் உண்மையென்பதையுங் கவனிப்பாம் : - -

சிவபெருமான் மூர்த்தியாக எழுந்தருளிய பல தலங்களையுந் தரிசித்துக், காஞ்சியினின்று அருணைவந்த நமதடிகள் எதிர்ப்பட்ட கணி கைமாதொருத்தியைக் கண்டு காதலிக்க, அவள் உடன்படாமைகண்டு மிக வருந்திப்பின் வீரியம் வெளிப்பட ஒருவாறு மனந்தேறியிருந்தனரென்றும், இஃதுணர்ந்த தாய்க்கிழவி தன் மகளுக்கு அடிகளின் அருமை பெருமைகளை எடுத்துணர்த்தி, அவரோடிணங்கச் செய்தழைத்துவர, அடிகள் வெளியுலக இச்சை நீத்துப் பரகலையின் உண்மைகண்டுணரும் நோக்கத் தோடிருந்ததால், அவளை நோக்கித்,

"தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விடார் தேறியிரு - நாடி நீ
யென்னை நினைத்தா லிப்ேபி லுதேப்பேனா
னுன்னை நினைத்தா லுதை".

என்னும் பாடலைக் கூற, அஃதுணர்ந்த கணிகை பின்னும் இரந்து வேண்ட அவர் பரிவுற்று முந்தி வெளிப்படுத்திய வீரியமிருக் குமிடத்தைக் குறிப்பா லுணர்த்த அவளதையுண்டு, திருப்புகழ் பாடிய அருணகிரி நாதரைப் பெற்றாளென்றும் வழங்குங் கதையை வெவாறொப்புவது? இஃது மெய்யாயின், பட்டினத்தார் புராணத்திலாவது, திருவெண்காட்டடிகள் சரித்திரமென்றநூலிலாவது இவ்வறலாறு காணப்படவேண்டுமே! எனஃதில்லை? இதனால், அவ்வாறு நிகழ்ந்ததெனக் கூறப்படுமுரை வெற்றுரையின் பாற்பட்டு, ஆன்றோர் பலரும் நகையாடுதற் கேதுவாயிற்றென்க. அன்றி வெளிப்பட்ட அடிகளின் வீரியத்தையண்டு, கருக்கொண்டனளென்பது இயற்கை விதிவிரோதமன்றோ? இத்தகைய

அசம்பாவிதங்களால் நமது அடிகள் வரலாற்றை வரைந்துரைத்தோரின் ஆற்றறனை யென்னென்பேம்? கூறுவோர் கூறினுங் கேட்பார்க்கு மதியிலைகொல்? என்றபழமொழிப்படி ஆன்றோர் மாட்டிவ் வாசகம் பழுதுபட்டொழியுமென்க, சிலர் நமது அடிகள் சாமானியரைப் போலல்லாது பெருமானைப் பேதமறக்கண்ட பெரியாரென்று உயர்வு கூறினாலும், இயற்கையில் நடவாதனவற்றை நடத்துதல் யார்க்கும் யாண்டும் அரிதாகலின், இவர் மட்டும் அதனை யெவ்வாறு செய்திருப்பாரென்பதே நமது கேள்வி?

திருவிடை மருதூர் மும்மணிக்கோவை முதலிய மற்றுஞ் சில காரணங்களாலும் பட்டினத்தடிகள் காலம் பத்தாவது நூற்றாண்டுக்குப் பின் என்று கூறுவதற்கேற்ற காரணங்களில்லை யென்பது முன்னமே காட்டினாம். தேவாரம் பாடிய சமயாசாரியர்களை அடுத்துத் தோன்றியபடி பட்டினத்தடிகள் காலம் 10 - வது நூற்றாண்டுக்குப் பிற்பட்டதேயாம்.

ஆகவே அருணகிரி நாதரை ஐந்து நூற்றாண்டுகள் தாவுமாறு செய்வதெங்ஙனம். **பட்டினத்தடிகள் வாழ்ந்திருந்த பின் 500 வருடங் கழித்தே அருணகிரியார் திரு அவதரித்தன ரென்பது, இது காறுங் கூறியவாற்றான்** பசுமரத்தாணி போற்றெளிவுறுத்தப் பட்டதென்க.

இங்ஙனம்:
சே - ரா - திம்மப் பையர்,
தலைமைத்தமிழ்ப் பண்டிதர்.

சித்தாந்தம் - 1915 ஆ - டிசம்பர் மீ